யானை தின்னச் செய்வீரேல் நீரெல்லாம் வல்லசித்தரேயாம். அம்மட்டோ வின்னும் ஆலவாய்க்கடவுளும்நீரே யென்ன; பெருமானு ரவ்வாறே செய்வல்காணு மென்னக் கல்யானை மதமொழுகு முயிரி யானையாய்க் கைகளைநீட்டிக் கரும்பைப்பறித்துத்தின்றது. பின்னுஞ்சித்தர் கடைக்கண் காட்ட, வவ்வியானை பாண்டியன் கண்டத் தொளிரு மாலையைப்பற்றி யீர்த்தது; உடனேவீரர்சென்று யானையை யடிக்கப் புகுங்கால், சித்தர் நில்லுமெனக் கையமர்த்தினர். உடனே *-யோவியம்போற் சும்மா செயலற்று நின்றுவிட்டனர்

பின் னபிடேக பாண்டியன் சித்தர் பாதங்களில்வீழ்ந்து வணங்கிக் குற்றத்தை மன்னிக்கவுந் தனக்குப் புத்திரப்பேறுண்டாகும்படி யனுக்கிரகிக்கவும் வேண்டினன். சித்த ரவ்வாறே யாகுமென ஆசீர்வதித்து மறைந்தனர். பின்ன ரபிடேக பாண்டிய னாலவாய்க் கடவுளே யெல்லாம் வல்லசித்தராய் வந்தனரென்று கோயிலெய்தி வணங்கி வந்தனன்; வல்லசித்தராம் வரைமகள் பாகன் றிருவருளால் விக்கிரம பாண்டியன் பிறந்தான். அவனை முறைபெற வளர்த்துக் கலைகள் பலவும் பயிற்றுவித்து, மனு நெறிமுறை தாழா தரசியற்றுவென வணிமணி மகுடஞ்சூட்டிச் சோதிலிங்கர் சுந்தரப்பதத் தைக்கியமானன்.

---

22-வது

## விக்கிரமபாண்டியன் ஆண்டகாலம்.

தேவவருடம் 4600 (நாலாயிரத்தறுநூறு) க்கு

திருவிளையாடல்கள் 2.

## யானையெய்த திருவிளையாடல்.

கல்லானை யானதை யெல்லாருங் காணக் கரும்புதந்த
யெல்லாமும் வல்லசித் தர்க்குப்பொற் கோயி லினிதமைத்தான்
வல்லாரில் வல்லவன் சந்த்ர குலேசன் மகாமன்னவன்
பல்லாரும் போற்ற வருகூடல் விக்ரம பாண்டியனே.

மட்டா ரலங்கல் புனைசோழன் விட்ட மதகளிற்றைக்
கட்டா ரழல்விழிச் சிங்கக் கணைதொட்டுக் காய்ந்தசொக்கர்க்
கட்டாலே மண்டப முண்டாக்கி னனல் லறந்தழையப்
பட்டாபி டேகம் புனைகூடல் விக்ரம பாண்டியனே.

---

* ஓவியம்-சித்திரம்

விக்கிரமபாண்டிய னரசாட்சி செய்துகொண்டு வருங்காலத்திற் காஞ்சிமாநகரிலிருந்தோர் சோழன் படையெடுத்துவந்து வெல்லவல்ல னல்லனாய்ப் புறங்காட்டி யோடித் தன்னாடு சென்று, சமணமுனிகளை வருவித்துப் பாண்டியனை யெவ்வாற்றானு மந்திரவலியாற் செயம் பெறுவித்துத் தருவீரே லங்நாட்டிற்பாதி யுமக்களிப்பனென வாக்களித்தா, னவ்வண்ணமே யவர்களோ ரியாகஞ் செய்தார்கள். அதனின்று மோர் மதக்களி றிருப்புலக்கையுடன் றோன்றிற்று; அதனை மதுரைமேலேவித் தாங்களும் பக்கபலமாய்ச் சென்றனர். பாண்டியன் வேகமாய் வந்த களிற்றையுஞ் சேனையையுங்கண்டு, கூடலமர் குழகனைச் சரண்புகுந்து போற்றி விண்ணப்பித்துக்கொள்ள, கறைமிடற்றண்ணலே யசரீரியாகப் "பாண்டியனே! பயப்படற்க" யாமே நின் சேனைவீரன்போற் சென்று வென்று வருவம்; நீ நெறிமிசை யட்டாலை மண்டப மொன் றியற்றுக, கவலை யொழியெனப் புகன்று போயினர். பாண்டியனும் அருட்டிறத்தை வியந்து போற்றிச் சிந்தனையின்றிக் கோயிலெய்தியிருந்தான். அச்சமயத்து மாயக்களிறும், யமண முனிவர்களும், மாயவே மதுரை நாயகனான வெம்பிரான் விளங்குறு வீரனாய்ச் சென்று, யானையைப் பாணமெய்து கொன்று பழியுடை யமணரையழிய வதைத்து மறைந்தருளினர். பாணம்பட் டிறந்த யானை, பருத்த மலையா யின்னும் விளங்குகின்றது. செழியன் சிந்தனையின்றிச் சிறப்புறு பூசனைக ளியற்றிச் சிம்மாசனமீதிருந் தரசியனடத்திவந்தான்.

---

23-வது

## விருத்தகுமார பாலரான
## திருவிளையாடல்.

விக்கிரமபாண்டிய னரசியற்றி வருங்கால், விருபாக்க னென்னுஞ் சிவபத்தியொழுக்க முதலியவற்றிற் சிறிதுங்குன்றாவேதியனு, மவன்மனைவி வடமீன்போலுங் கற்புடைச் சுபவிரதை யென்பவளு, மில்லறநடாத்தி வருகையின், மங்கைபாகர் திருவருளாலொருபுத்திரிபிறந்தாள். அவட்குக், 'கௌரி' யென்றுநாமகரணஞ்செய்து சீரொடுவளர்த்து வருகையிற், பிறைபோல் வளரும்

பெண்ணை, யொருநாள் தன்னில்லத்திற்கு யாசகத்திற்குவந்த பிரமச்சாரிக்கு, விளைவயத்தாற்றந்து பின்குலமுதலியவைகளுணர்ந்து வருந்தி யெல்லா மாலவாயமர்ந்த சிவன்செயலெனத்தேறி, வரிசைகளுட னவளைப் புருஷனுடனனுப்பினான். கண்டோரெல்லாம் யாசகம்புகுந்த பிரமச்சாரிக்குவந்த யோகமேயோகமென வியந்து பேசினார்கள். அவன்வீட்டாரோ வைணவர்களாதலினாற், சாம்ப லணிபவள் வீட்டுப்பெண்ணென நிந்தித்துக் கூறிப் புறம்பாக்கவைத்துக் கொடுமையேசெய்து வந்தார்கள். அவர்கள் கொடுமைக்கோ வளவில்லையாயினுங் கற்புடையத்தையல், கூற்றையுதைத்த பதங்களையனுதினமுஞ் சிந்தித்து பிறப்பறுத்து, முத்திதருவதாகிய விபூதியையணிந்த வடியாரைக்காணுதலுமின்றி, யன்னோரைக்காணக்கிடைக்குநாள் என்றோ வென்று மனம் வாடியிருந்தாள். ஒருநா ளிப்பெண் ணேற்றதவத்தா லவள்மாமி முதலியவெல்லோரு மடுத்த கிராமத்திற்குத் தம்மினத்தவர் மணத்தின் பொருட்டேகினர், அத்தினத்திலவள் மட்டுந், தனித்திருக்கநேர்ந்தது. தனித்திருக்கும்போழ் தெவரேனுஞ் சிவனடியார்கள் வந்து தரிசனந்தந்து மனக்கவலைமாற்றாரோ வெனச் சிந்தித்திருக்கையி லரிபிரமற்கரியனு, மடியார்க் கெளியனுமாகிய மெய்யன் கிழத்தவவேடத்தோடு தோன்றி யன்னம் வேண்டுமென, அவள்மனங் கலங்கிச் சுவாமி! யெம்மவர்க ளெல்லாஞ் சிவச்சின்ன முடைய வென்னை வெறுத்துப் புறத்தே தள்ளி நிந்தித்து வருகின்றார்கள்; இன்று சமையற் பொருளெல்லா முள்ளறைக்குள் வைத்துக் கபாடபந்தனஞ் செய்துபூட்டியிருக்கின்றார்களென. விருத்தர் நீ கபாடங்க ளருகிற்செல்லிற் றிறக்குமென, அவளுமருகிற் செல்லக் கபாடங்கள் திறந்தன, உட்சென்று நல்ல பதார்த்தங்களெடுத்துச் சுவையுடைய வமுதாக்கி ஐயனுக்குப் படைத்தனள். உண் டப்பனும் வாலிபராய்விளங்கினர்.

கௌரிகண் டஞ்சி யீதென்ன விந்தையா யிருக்கிறதென் றெண்ணிக் கொண்டிருக்கையில், வீட்டவர் வந்தனர். அதுகண்டு மிக நடுங்கியிருக்கையில், வாலிபராயிருந்தவர், குழந்தையாயினர். உடனே மாமி யிக்குழந்தை யேதென, யாரோ வொரு புருடனு மவன் மனைவியு மிப்பிள்ளையை யிங்கே கிடத்திப் பார்த்துக் கொள்ளெனச் சொல்லிச் சென்றனரென்று பயந்து சொல்லினள். அதுகேட்டுக் கொடு மாமி யுனக்கித்தனை யாணவமோவென வவளை

யுங் கைக்குழந்தையையும் வெளியே தள்ளிவிட்டனள். உடனே குழந்தையாயிருந்தவர் ரிடபாரூடராய்க் கௌரியுந் தன்னிடப்பாலி லிருக்க விளங்கினர். யாவருங் கண்டு போற்றித் துதிக்க விண் புகுந்தனர். விக்கிரம பாண்டியன். பெம்மானார் திருவிளையாடல் கண்டு மென்மேலும் பத்தியுடையவனாய்ச் செங்கோலோச்சித் தன்மகன் இராசசேகர பாண்டியனுக்கு மகுடஞ்சூட்டிச் சுந்தரனடிநிழ லடைந்து சுகமுற்றான்.

---

24-வது

## இராஜசேகரபாண்டியன் ஆண்டகாலம்.

தேவவருடம் 9700 (ஒன்பதினாயிரத் தெழுநூறு)க்கு

திருவிளையாடல் 1.

## மாறியாடின திருவிளையாடல்.



இராஜசேகர பாண்டியன் றில்லையம்பலத்து நடநவிலும்பெரியன். நடனஞ்செய்வதால், அத்தொழிலைத் தானுஞ் செய்வது சரியல்லவென் றெண்ணிப் பரதநூலொழிந் தேனைய நூல்களனைத்துங் கற்று மாசறுமணிபோல் விளங்குநாள், ஒருநாள் சோழநாட்டிற் றிருவானைக் காவி லெழுந்தருளிய நாதர்க் கன்புடைய வொரு புலவன் வந்து, பாண்டியனைக்கண் டெம்மரசன் கரிகாற் பெருவளவனுக் கெல்லாக் கலைகளும் வரும். நினக்குப் பரதநூல் வாராதாதலால், நீ எம்மரசனிலுங் குறைந்தவனென்றான். உடனே குறையுடையவனாயிருக்க விரும்பாது, பரதநூல் வல்ல புலவரை யழைத்துப் பரதநூன் முற்றுங் கற்றுப் பயிலுதல் சிரமமுடைத்தா யிருத்தலாலுந், தேகவருத்தந் தருதலுங்கண்டு வெள்ளியம்பலத்தே நடம்புரியு மீசற்குப் பாதநோமென மனநொந் தொரு நாளிரவு, நாலு சாமமும் பூசனையியற்றிக் குன்றவில்லியைக் கான்மாறி யாடும்படிச்செய்து, என்றுமே யவ்வண்ணமிருக்க வரம் வேண்டிப் பற்பல பூசனையியற்றிப் பூமகள் மகிழ நல்லரசியற்றித் தன் மகன் குலோத்துங்கனுக்கு முடிசூட்டிச் சோமசுந்தரனிடத் தைக்கியமாயினான்.

---

25-வது

# குலோத்துங்கபாண்டியன் ஆண்டகாலம்.

தேவவருடம் 6300 (ஆறாயிரத்து முன்னூறு,)க்கு

திருவிளையாடல்கள் 3.

## பழியஞ்சின திருவிளையாடல்.



குலோத்துங்க பாண்டியன் பதினாயிரம் பெண்களை மணந்து சுகமாக வாழ்ந்துகொண் டிருந்தான். ஒவ்வொருவர்க்கு மாறாக வறுபதினாயிரம் பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களி லனந்தகுண னென்னும் பட்டமகிஷி வயிற்றிற் பிறந்தமகன், தாராகணங்களி னிடைமதியம்போல விளங்கினன்; மக்க ளின்புறவு முலகங் களிக்கவு மரசாண்டு வருங்காலத்தி லொருநா ளொருவேதியன் றிருப்பத்தூரிலிருந்து கருப்பிணியாகிய தன் மனைவியொடும், ஒரு கைக் குழந்தையொடும், மதுரையிலுள்ள தன் மாமனார் வீட்டிற்குவந்து கொண்டிருந்தான், வழியிற் றாகமாக விருக்கிற தென மனைவிகூற வொருபெரிய ஆலமர நீழலிற் குழவியையும், அவளையு மிருக்க வென வியம்பி § உதகங் கொணரச் சென்றனன்; திரும்பிவந்து நோக்குங்கால், குழந்தை யழுதுகொண்டிருப்பதையும், பாணந் தன் மனைவி வயிற்றிற் றைக்க மடிந்து கிடப்பதையுங் கண்டு, மிகப் பிரலாபித்து, அழு தரற்றி யொருவாறு தேறி யிது செய்ததா ரெனத் தெரிந்துகொள்ளச் சுற்றிப்பார்க்கையின், மரத்தின் பின் பக்கத்தில் வில்லு மம்புமாக வொருவேட னிருப்பதைக்கண் டவனே கொன்றானெனத் தீர்மானித்து மனைவியை முதுகிற்சுமந்து கொண்டு, குழந்தையைக் கையிற் றாக்கிக்கொண்டு, வேடனை மடி பிடித்திழுத்துக்கொண் டரசன் சமுகத்தே சென்று முறையிட; அரசன் பலவிதத்தும் விசாரித் துண்மை புலப்படா தெம் பெருமானு ரிடமுறையிட; அவர் கனவிற்றோன்றி சமீபத்தி னடக்குங் கலியாண வீட்டில வந்திருந்தா லுண்மை புலப்படுமெனச்சொல்லி மறைந்தார்.

---

§ உதகம் - நீர்.

அரச னிவைக ளனைத்துஞ் சொக்கேசர் திருவிளையாட்டென வெண்ணி, வேதியனை யழைத்துக் கொண் டக்கலியாண வீட்டின் மறைந்திருந்தனர். அப்பொழுது கரியமேனியையுடைய விரண்டு தூதர்கள் பேசுவதுஞ் செய்வதும், ஆலமுண்டவ னருளாற் றோன் றிற்று; அச்சமயத்தின் மணமகனு யிருப்பவனுக்கு வயது முடிவானபடியால், அவனை யழைத்துவரும்படி யெமனு லனுப்பப் பட்டதூதர், தம்முட் பேசிக்கொள்வாராயினர். இவனுயிரை யெவ்வித காரணத்தால் கவர்வதென வொருவன் கேட்க; இஃதென்ன கடினமா? அடவியிலிருந்த பார்ப்பினியை மரத்தின்மே லிருந்த அம்பினைக் காற்றினலசைத்துப் பார்ப்பினியைக்கொன் றதுபோற் சமீபத்திற் கட்டியுள்ள பசுவின் றும்பைத் தறித்து, மாட்டின் கொம்பிலிருந் துயிரினைக் கவரல்வேண்டுமென; அதுவே சரியெனத் தேறி, யவ்வாறே செய்து மணமக னுயிரைக்கவர்ந்தனர். இவைகளைக்கண்டு கேட்டிருந்த வேதியனு மரசனுந்தெளிந்து, வேடுவனை வீணில் வருத்தியதற்காக மனம் வருந்தி வேட்டுவனுக்கு மிக்க பரிசு கொடுத்து, வேதியனுக்குப் புதுமண மியற்றிக்கொள்ள பொன்னுங் கொடுத்தனுப்பினன். இவ்வா றீசனருளாற் பழியி னின்று நீங்கியதற் கரசன்பேரானந்தங்கொண்டு, சடாடவிச்சங்கரனுக்கு விழாமுதலிய வியற்றிப் பூசித்துவந்தான்.

26-வது

# மாபாதகந்தீர்த்த திருவிளையாடல்.



குலோத்துங்கபாண்டிய னரசியற்றி வருநாட்களி லவந்திநகரத்தொரு வேதியனு மவனழகுடை மனைவியுமாக வாழுநாளி லொரு துர்க்குணமுடைய மகன் பிறந்து வயதடைந்ததுந் தாயினைப் புணரநினைத்துத் தகப்பனைக் கொன்று, நாட்டிலிருப்பிற் பழிப்பரென வன்னையு மகனு மயற்கிராமஞ் செல்லுகையில், வழியிற்சில கள்வ ரவனை யடித்துத் துரத்திப் பொருளினையு மவன்றாயையுங் கவர்ந்துகொண்டார்கள். இவனுக்கு மாபாதகந் தொடர்ந்து பல பல நாட்டிற்றிரிந்து பின் கடம்பவனம் வந்ததும் பாதகந் தீர்ந் தறிவுதித்துச் சொக்கலிங்கரைப் பூசித்துப் புனிதனுயினன். நாட்டாரெல்லாங்கண்டு சுந்தரநாதன் றிருவருளாற் றெலேயா மாபாதகந் தீர்ந்தவருமையை நினைத்துப் போற்றித் துதித்திருந்தனர்.

27-வது

# அங்கம்வெட்டின திருவிளையாடல்.



குலோத்துங்கபாண்டிய னீதிவழுவா தரசியற்றி வருநாளி லோர் விருத்தன், வாள்பயிற்றுவித் தநேகரை வல்லாராக்கிப்புகழ் பெற்றிருந்தா னதிற் சித்தனென்றொருவன்கற்று யாரினும் வல்ல னாய்த்தேறி மீறி தனித்தொருகூடஞ் சமைத் தநேகர்க்குப் பயிற் றுவித்தான். ஆசான்கிழவனாதலான், மாணவர்கள் சித்தனிடமே மிகுதியும் வந்துசேர்ந்து பயின்றுவந்தார்கள். இவன் றுன்மார்க்க னாதலாற் குருபத்தினியை யிச்சித்துத் தினந்தினம்வந்து, குறிப் பித்துக்கொண்டிருந் தொருநாள், வலாத்காரஞ்செய்ய, வம்மாதுசி ரோமணி யக்கொடியன் கையிற்றப்பி மனையுட்புக்குத் தாட்கோலி ட்டுத்தன்னைக் காத்துக்கொண்டு, கடம்பவன சுந்தரனைப் போற்றி த் துதித்துத் தன்குறையனைத்துங் கூறிப்பிரலாபித்தாள். இறை வர்தோன்றி யஞ்சற்கவென் றபயந்தந்து சித்தனைவிளித்து வாட் போர்க்கழைத்து கிழவன்றானே யென்றும் வென்றுவிடலாமென் றெண்ணிவந்த குருபத்தி யில்லாத கயவனைவெட்டிச் சிதைத்தரு ளினர். இவ்விடைய மூரெலாம் பரந் தூரார் திரியம்பக மேந்திய சுந்தரனைத்துதித்துப் போற்றினர்.

28-வது

## அனந்தகுணபாண்டியன் ஆண்டகாலம்

## தேவவருடம் 4200 (நாலாயிரத்திருநூறு) க்கு

## திருவிளையாடல்கள் 2

# நாகமெய்த திருவிளையாடல்.



குலசேகரபாண்டியன் பல்லாயிர வருட மரசாண்டு, அனந்த குணசேகர பாண்டியனுக்குப் பட்டஞ்சூட்டி, அயன்றலைக் காத் தறுமுகன்றந்தை தாளடைந்துய்தான். அனந்தகுணபாண்டிய னர சாட்சி செய்து வருங்காலத்திற், பற்பலாயிர வமணர் பாண்டியனை யழிக்கவேண்டி வேள்வியியற்றி யதினின்றுமொரு கொடுவிடநாக த்தை யுண்டாக்கி, மதுரையை விழுங்கி வருகவெனவிடுத்தனர்.

எல்லாருங்கண் டஞ்சினார்கள். பாண்டியனே சிறிதுமஞ்சாது போர்க்கோலங் கொண்டு நாகத்தையெய்து கொன்றனன். நாகமிறக்கு மமையங், கொடியவிடத்தைக் கக்கிமதுரைக் கேட்டையுண்டாக்கியது. அதனையீச்சுரன் சடையில்விளங்குஞ் சந்திர னமுதினால் விடக்கொடுமையைநீக்கி, முன்போன் மதுரைமா நகராக்கினார்.

---

29-வது

# மாயப்பசுவை வதைத்த திருவிளையாடல்.

சமணர்கள் முன் றுங்களேவிய களிறு மாய்த்ததுபோலநாக மழியக்கண் டென்செய்வதென யோசித்துப், பாண்டியர்கள் பசுவைக் கொல்லாரென வெண்ணி, யாககுண்டத்திலிருந்து மாயப்பசுவை யுண்டாக்கி மதுரையின்மேலேவ, வதுகண்டுபயந்து மனிதர்களுந் தேவர்களுங் கௌரிபாகனிடந் துதித்துப் பணிந்து முறையிட்டுக்கொள்ள, வவரஞ்சலென வபயங் கொடுத்துத் தன் னந்தியையேவ, வதுசென்ற மாத்திரத்தி லந்தமாயப்பசுமயங்கிக் காமங் கொண்டு வீரியமனைத்துங் கழலவிட்டு வீழ்ந்துயிர்விட்டு மலையாய் விளங்கிற்று.

இக்காலத்திற்றான், சீராமர், இலங்கைக்குப் போகும் பொருட்டு அங்குவந்து, அவ் ‡ விடபமலையிற்றங்கி யகத்திய முனிவரா லத்தலமான்மியப் பெருமையைக் கேட்டன்புற்று, எம்பெருமானைப் பூசித்துப், பின் றென்கிழக்குத்திக் கடைந்து கடலிற் சேது கட்டி இலங்கையிற்சென்று, இராவணசம்மார முடித்துச் சீதையைச் சிறைமீட்டிவருங்கால், சேதுவிற் சிவலிங்கப் பிரதிட்டை செய் தயோத்திக்கேகியது.

---

‡ இடபமலையென, அருணகிரியாராலும், நக்கீரர்முதலியசங்கப் புலவர்களாலும் பாடல்பெற்று, வேற்கைக்குமரவேட் பெருமான் அறுபடை வீட்டிலொன்றாகி, பழமுதிர் சோலையெனப்பெயர் பெற்றதலத்தில் வழங்கிவந்தன. தற்காலமட்டும், அஃது அழகர்மலை யென்றும், திருமாலிருஞ் சோலையென்றும் வழங்கிவருகிறது.

## குலோத்துங்கபாண்டியன் ஆண்டகாலம்.

தேவவருடம் 7400 (எழாயிரத்துநானூறு)

இவர்காலத்துத்திருவிளையாடல்களில்லை.

---

## அனந்தசுகபாண்டியன் ஆண்டகாலம்.

தேவவருடம் 10 100 (பதினாயிரத்துநூறு)

இவர்காலத்துந் திருவிளையாடல்க ளில்லை.

---

## குலபூடணசமபாண்டியன் ஆண்டகாலம்.

தேவவருடம் 6300 (ஆறாயிரத்துமுந்நூறு)

இவர்காலத்துந்திருவிவிளையாடல்க ளில்லை.

---

## அனந்தவிதகுணபாண்டியன் ஆண்டகாலம்.

தேவவருடம் 5500 (ஐயாயிரத்தைநூறு)

இவர்காலத்துந் திருளையாடல்க ளில்லை.

---

30-வது

## குலபூடணபாண்டியன் ஆண்டகாலம்.

தேவவருடம் 3900 (மூவாயிரத்துத்தொளாயிரம்)

இவர்காலத்துத் திருவிளையாடல்கள் 3.

# மெய்க்காட்டிட்ட திருவிளையாடல்.

குலபூடணபாண்டியன் அரசாட்சிசெய்து வருங்காலத்திற், காட்டரசனாகிய 'சேதிராயன்' மிக வன்மையுடையனாய்ப் பாண்டியற்கு விரோதமாய் மீறுவதைக்கேட்டு, சேனைதிரட்டும்படிச் சாமந்தனென்னுந் தன் சேனைத்தலைவற் 'களவற்ற பொன்கொடுத்துச் சேனைசேர்க்கச்சொல்லினான். அவன் சிவபத்தனாதலால், வழக்கம்போற் சேனைதிரட்டா தப்பொருளனைத்தையுஞ் சிவனடியார்களுக்குஞ், சிவகைங்கிரியத்திற்குஞ் செலவிட்டான். அரச னிஃ

துணர்ந்து படைகளைக் கொண்டுவர வுத்திரவுசெய்தும் வராததினு ற், கடினமாய் நாளையே வரல்வேண்டுமென் றுத்திர விட்டான். உடனேசாமந்தன், கற்பூரசுந்தரர்பால் முறையிட்டுக்கூற; அவரஞ் சற்க, நாமே நாளை சேனையோடு வருவமெனப் புகன்று, மறுநாட் சேனையோடுவந் தரயனுக்குக் காட்டிப் பின் மறைந்தருளினர். அதற்குட் சேதிராயனும், புலிக்கோட்பட்டானெனச் சேதிபரவி யது. பாண்டியன் பாம்பணிபரமன் றிருவாடல்கண்டு வியந்துபோ ற்றித் துதித்தனன்.

31-வது

## உலவாக்கிழியளித்த திருவிளையாடல்.

குலபூடணபாண்டிய னரசாட்சிசெய்து வருங்காலத்திற், சோ மசுந்தர ரிடத்திற் பக்தியுடையனுப், நீதிநெறி தவறாது யாவரும் புகழ விருந்தானுனலும், வேதங்களையுணர்ந்த வேதியர்களை மதியா திருந்த குற்றத்தான், மழையின்றி நாட்டிற் பஞ்சமெய்தி, நிரம்பு வந்துற்றது. பின் யாவரும் சோமசுந்தரேச ராலயத்துட்சென்று பூமியில் விழுந்து நமஸ்கரித்துப் போற்ற, மதுரைநாயகர் கனவி டைத்தோன்றி வேதியரை மதியாத் தோடத்தான் மழைவளங் குன்றியது; இனியவ்வாறு செய்யற்க, இதோ வொரு பொற்கிழி தருகின்றே மிதனைக்கொண்டு நின்னிரப்பைப் போக்குதி, இப் பொற்கிழியி லெவ்வள வெடுத்தாலுங் குறையாது, முன்போல வே யிருக்குமென வுரைத்தருளி மறைந்தார். பாண்டியன் றுயிலு ணர்ந்து கனவிற் கண்டது மெய்யாகக்கண்டு மந்திரி முதலியவர்க ளுக் கீந்து வேள்வி முதலியவைகள் செய்வித்து ஆலாலசுந்தரற்கு ப் பொற் கோபுர முதலிய சமைத்துப் பொன்னுடைனப் பொலி வித்து, நல்லரசு செய்திருந்தான்.

32-வது

## வளையல்விற்ற திருவிளையாடல்.

குலபூடண னரசாட்சி செய்து வருங்காலத்திற் றருகாவன த்து ரிஷிபத்தினிகளின் கற்பைச் சோதிக்க வேண்டிக் கடம்பவன க் கண்ணுதற்கடவுள், பிட்சாடண வேடங்கொண்டு பிட்சையெடுக்

கச் சென்றகாலத்தில், ரிஷிபன்னியர்கள் கற்பழிந்து வளையுங் கலையுங் கழன்று, நாணுந்துறந்து, நின்றனர். பின்னர் முக்காலமுணர் முனிகளறிந்து, முனிந்து மனைவியர் கற்பழிந்தவற்றையுங் காரணத்தையுமறிந்து, நீவிர் மதுரையிற் செட்டிப்பெண்களாய்ப் பிறக்கவெனச் சபித்தனர். அவர்கள் வருந்திக்கேட்க மனமிரங்கி நீவிர் பிறந்தபின் சோமசுந்தரக்கடவுள் வளையல்விற்குஞ் செட்டியாய் வந்துங்கள் கரங்களைத் தீண்டுவா ரக்காலையி லிச்சாபம் விமோசன மாகுமென்று சொல்லினர். அவர்களுமவ்வாறே மதுரையிற் செட்டிப் பெண்களாய்ப் பிறக்க, சொக்கேசர் வளையல்விற்குஞ் செட்டியாய்ச் சென் றம்மாதர்களை, வளையலோடு காமமுமணிவித்து, கரங்களைப்பற்றி மெய்யின்பளித்துச் சென்றார். கரங்களைப் பற்றிய பரிசத்தாலேயே, அச்செட்டிப் பெண்க ளநேகம் புதல்வர்களைப் பெற்று புவிபுகழவாழ்ந்து, பின் றம்மிடஞ்சென்றனர்.

33-வது

## பாண்டியவங்கிஷபாண்டியன் ஆண்டகாலம்.

தேவவருடம் 7200 (ஏழாயிரத்திருநூறு) க்கு

திருவிளையாடல்கள் 2.

# அட்டமாசித்தியுபதேசித்த திருவிளையாடல்.



சிவபெருமான் கைலையங்கிரியிற் பலமணி யொளிசெயுங் கனகமண்டபத்திற், பற்பல கணங்க டுதிசெய்து முறையிற்கேட்க, நல்வினைக் கதைகளைச் சொல்லிக் கொண்டிருக்கையில், ஆறுமுகக் கடவுட் கமுதருத்திய வாறுகன்னியருந் தோன்றி, யட்டமாசித்தியுபதேசித்தருளல் வேண்டுமென்று வேண்டிக் கொள்ள; நிலவணி நிமலனார், திருவாய் மலர்ந்தருளுஞ் சமயத்திற் சிறிதசட்டை செய்து கவனியாதிருத்தல் கண்டு, (1000) ஆயிரவருட "மதுரைபட்டமங்கலத்திற் பேராலமரத்தடியிற் கல்லாய்க்கிடக்கவெனச்" சாபமிட்டார். அவர்கள் பின்பு பொறுக்கவெனப்பன்முறை வேண்டப் பரிவுகூர்ந்து யாமு மவண்டோன்றி யட்டமாசித்தி யுபதேசித்துச் சாபந்தீர்ப்போமெனச் செப்பினர். அவர்களவ்வணமே, யாலின் கீழ்க்கல்லாய்க்கிடந்தனர். இறைவர் தோன்றி யவர்களை முன்னுருவாக்கி யட்டமாசித்தி யுபதேசித்தரும்பத மளித்தனர்.

34-வது

## விடையிலச்சினையிட்ட திருவிளையாடல்

பாண்டியரிற் பண்புயர் பாண்டியவங்கிஷ பாண்டிய னரசியற்றி வருநாட்களில், காஞ்சியிற் காடுவெட்டி நாடாக்கிச் சிவாலயஞ் செய்த காடுவெட்டிச்சோழன் மிக்கசிவபத்தியுடையனாய், மதுரை சோமசுந்தரப் பெருமானைத் தெரிசிக்கவெண்டுமென வாவல்கொண்டு, வழிகாணாதிருக்கும் போழ்து, கல்லானைக்குக் கரும்பருத்திய சித்தர் கனவிடைவந்து, நீபாண்டிநாட்டிற்குத் தனித்துவேடமாறிவருக நாம் சுந்தரலிங்கனைத் தரிசிப்பிப்போ மெனச் சொல்லி மறைந்தனர். சோமசுந்தரரே வந்துரைத்தன ரென்று நிச்சயித்தவர் மொழிப்படியே யுடனே புறப்பட்டு மதுரை சென்றான். வைகைப் பெருக்கைக்கண் டெவ்வாறுகடப்பதெனச் சற்றுயோசித்துக்கொண் டிருக்கையில், மாறியாடிய மாதவனருளால் வைகை வற்றிப்போக வதனைக் கடந்தான். பின் சொக்கலிங்கரே சித்தராய் நேரிற்றோன்றி யழைத்துக் கொண்டு, வடக்குவாயிலாய்ச் சென்று பொற்றாமரையில் ஸ்நானஞ் செய்வித்து, ஆதிலிங்கத்தைத் தரிசிப்பிக்கச்செய்து, மீட்டும் வடக்குவாயின்மட்டும் வந்துவழிவிட்டு முன்போற் கபாடபந்தனஞ்செய்து ?ரிஷபமுத்திரையிட்டுப் போயினர். காலையிற்றுயிலுணர்ந்து காவலர் மற்றை வாயில்களிற் கயல்முத்திரையிருக்க, வடக்குவாயிலின் மட்டும் விடையி லச்சினையிருக்க வரசற்கறிவிக்க, வரசன் அறியானாய்ச் சோமசுந்தரரை வேண்டித் தரையிற் கிடக்கும்போழ்து, சுந்தரநாதன் கனவிற்றோன்றி யுண்மையைத்தெரிவிக்க. அரன்றிருவருளைச் சிந்தித்துப்போற்றியிருந்து பின் றன்மகன் இராசேந்திரபாண்டியற்குத் தன்னரசளித்துச் சிவைக்கியமாயினான்.

35-வது

## இராசேந்திர பாண்டியன் ஆண்டகாலம்.

தேவவருஷம் 3500 (மூவாயிரத்தைநூறு) க்கு

### திருவிளையாடல்கள் 2.

## தண்ணீர்ப்பந்தல் வைத்த

### திருவிளையாடல்.

காடுவெட்டியசோழன் பின்ன ரடிக்கடி நேரேசென்று கடம்பவன வாதிலிங்கத்தைத் தரிசித்துச் செல்லவிரும்பிப் பாண்டியனை நட்புக்கொள்ள, வனேகவரிசைகளுங் கையுறைகளையும் அனுப்பினன். பாண்டியனும் பதிலாகத் தானும் வேறுகையுறைகளையும், வரிசைகளையுமனுப்பித் தனக்குச்சோழன் பெண்ணைக் கொ

டுக்கும்படி வேண்ட வவனுஞ் சம்மதித்திருந்தான். இதனையறிந்த, இராசேந்திர பாண்டியனின் றம்பியாகிய வொருகொடியோன், படை யெடுத்துச்சென்று சோழனைப் பெண் கொடுக்கக்கேட்க, அவன்படைக்கஞ்சிமுன் இராசேந்திரபாண்டியனுக்கு வாக்களித்த பெண்ணை, அவன் றம்பியாகிய விக்கொடியவனுக்குக் கொடுத்தனன். பின் னிக்கொடியன் மாமனாரின் றுணைக்கொண் டண்ணன் மேற் போர்க்கெழப் பாண்டியன், சிவபெருமானிடத்து முறையிட்டுக் கொள்ள; சிவபெருமான் நீ நாட்டி னொருகாத தூரத்திற் சென்றிருவென்ன. அவ்வாறே சென்றிருக்க; சோழன் சேனையொடு தன் றம்பிவந்துநெருங்கிப் போர்செய்ய, பாண்டியனும் போர் செய்தான். அப்போழ்து காரினை மாடமாக்கிய நாயகர், என்றுமில்லா வெப்பமுண்டாகச்செய்தனர். அச் சமைய மிருதிறத்துச் சேனையும் வெயிலி லுணங்கி வாடினர். அப்பொழுது நாரிபாகனார், தண்ணீர்ப்பந்தல்வைத்துப் பாண்டியன்சேனைக்குத் தெளிவுண்டாக்கினர். தெளிவுடன் பாண்டியன்சேனை போர்செய்ய, தம்பியின் சேனை சிதைந்தழிந்தது. பாண்டியன் றம்பியையும், சோழனையும் பிடித்துக் கொண்டான். தண்ணீர்ப்பந்தல் வைத்த தண்ணிலாச் சேகரர் மறைந்தருளினார். இவ் வருள்செய்வித்தது சுந்தரசேகரரெனத் தேறி, அவரிடஞ்சென்று சிறையகப்பட்டவர்களை யென் செய்வதென வேண்டிக் கேட்க; நின் னிட்டப்படிச் செய்யென; சோழன் சுந்தரலிங்கர்பாற் றெண்டுடைய னாதலால், வரிசைகளீந் தவன்பதிக்கனுப்பித் தம்பிக்கறிவுறுத்தி யின்புற வரசாண்டு, கடம்பவன லிங்கரைப் பூசித்து வாழ்ந்துவந்தான்.

---

36-வது

## இரசவாதஞ்செய்த திருவிளையாடல்.

இராசேந்திர பாண்டிய னரசாட்சி செய்துவருங் காலத்தில், திருப்பூவண மென்னுமூரிற் பொன்னனையாளென்னு மாதுசிரோமணி, சிவபத்திமிக்குடையளாய்ச் சிவபூசைமுதலிய வியற்றி, சிவனடியார்கள் பலருக்கு முணவளித் தாதரித்துவந்தாள். இவளுக்குச்சிவபெருமா னுருவஞ்சமைக்க விரும்பி, பொன்னிலையேயெனக் கவன்றுகொண் டிருக்கையில், சிவபெருமா னவள் பேரன்பை

யுலகத்தவ ரறியற்செய்ய வேண்டுமென்ற சிந்தனையுடையரா யொருசித்தராய், சிவனடியார் குழாத்திடைவந்து தனித்திருந்தார். எல்லோரு முண்டுசென்றபின் னிவர் தனித்திருப்பதைச் சேடியராற்றெரிந் தவரையழைத்து நமஸ்கரித்து, தங்களடியாள் பால் வந்த காரணமியாதெனக்கேட்க; அவர் சிந்தனையுற்று வாடுமாதே! யாம் மதுரையில்வாழுஞ்சித்தன்; நின்மனக்கவலையை நீக்கவந்தேம் நின்னகத்திலுள்ள இரும்பு, வெண்கலம், பித்தளைமுதலியன கொணர்கெனக் கொணர்ந்தவற்றை, திருநீறுதடவித் தொட் டிதனையிரவு நெருப்பில்வைத்துக் காலையெடுப்பின், பொன்னுமென வுரைத்து மறைந்தருளினர். உடனே பொன்னனையாளுஞ் சோமசுந்தரனே யெனத் துணிந்து போற்றித் துதித் தவர் சொல்லியபடியே யவ் வுலோகங்களை, நெருப்பில்வைத் தெடுக்கப் பொன்னாயின. அதனை யெடுத் துருவஞ்சமைத்து வணங்கிப் பதமடைந்தாள்.

---

## இராஜேசபாண்டியன் ஆண்டகாலம்.

தேவவருஷம் 8100 (எண்ணுயிரத்துநூறு)

இவர் காலத்துத் திருவிளையாடல்களில்லை.

## இராஜ கம்பீரபாண்டியன் ஆண்டகாலம்.

தேவ வருஷம் 6200 (ஆறுயிரத்திருநூறு)

இவர் காலத்துந் திருவிளையாடல்களில்லை.

## வங்கியதீப பாண்டியன் ஆண்டகாலம்.

தேவ வருஷம் 6200 (ஆறுயிரத்திருநூறு)

இவர் காலத்துந் திருவிளையாடல்களில்லை.

## புரந்தசித்துப் பாண்டியன் ஆண்டகாலம்.

தேவ வருஷம் 8300 (எண்ணுயிரத்துமுன்னூறு)

இவர் காலத்துந் திருவிளையாடல்களில்லை.

## வங்கியபதாக பாண்டியன் ஆண்டகாலம்.

தேவ வருஷம் 10100 (பதினுயிரத்துநூறு)

இவர் காலத்துந் திருவிளையாடல்களில்லை.

---

37-வது

சுந்தரேச பாதசேகரன் ஆண்டகாலம்.

தேவவருஷம் 5800 (ஐயாயிரத்தெண்ணூறு) க்கு

திருவிளையாடல்கள் 3.

## சோழனை மடுவில் வீழ்த்திய திருவிளையாடல்.



சுந்தரேசபாத சேகரபாண்டியனென்போன் வளைகடலுலகு தன்னைக் குறும்பறுத்து, வான்பயிர் வளர்ப்பதென்னக் காத்து வருநாளிற் றன் பத்துத்தேர், நூறியானை, நூற்றுப்பத்துக் குதிரையிவைகளுடையனாய், மற்றதிரவியத்தை யாலாலசுந்தரன்பூசை முதலியவைகட் குபயோகித்து வருநாட்களிற், சோழனொருவன் 100 தேர்களுக்குத் தலைவனாய்த் திக்குவிஜயஞ்செய்ய நினைத்துப், பாண்டியன் சேனைப் பலமிலாதிருத்தல்கண் டவன்மேற் படையெடுத்துவந்தான். அவன்மிக்க சேனையோடு வருதல்கண்டு முக்கட்பரமன் கோயிலிற் சென்று முறையிட்டுக்கொள்ள; அவரஞ்சாதெதிர்நிற்க, நாம் வெற்றிவருவிப்பமென்ன வசரீரியாக மொழிய; அவ்வண்ணமே யெதிர்சென்று போர் புரியுமளவிற், சிவபெருமான் வேடனைப் போல வந்து வளவன் வலிகெடுத்தவனையு மடுவில் விட்டி யருளினார். பாண்டியன் மகிழ்ந் தெஞ்சிய சேனையையுந் தன்னாட்டிற் கொண்டேகி, ஈச்சுரனைப் பூசித்துக் கொண்டாடி வேதியர் கட்குஞ் சிவனடியார்களுக்கும் பேருதவி செய்தான்.

38-வது

## உலவாக்கோட்டை யளித்த திருவிளையாடல்.



சுந்தரேசபாத சேகரன் அரசு புரிந்து வருநாட்களிலொரு வேளாளனு மவன் மனைவியுஞ், சிவன்பாற்பதித்த நெஞ்சினராய்ப் பூசித் தடியர்களுக் கன்னமளித்து வந்தார்கள். இச்செயலால் நாளுக்கு நாள் செல்வங்குறைந்து தாம் மேற்கொண்ட விரதமுடிக்கரிய

ராய்ச் சொக்கேசப்பெருமான் சோதிமயப் பொற்கோயிலுட்போய்ப் புகுந்து, சொக்கேசனைவேண்டி யின்னருட்கடலே! இன்பவாரியே! எஞ்சுகவெள்ளமே! யாங்கொண்ட விரதம் நிரப்பால் வழுகநேர்ந்தன. அஃதாற்றேம் இன்னே யுடல்விடுவோமென்ன வாள்மேற்பாய, காதலனுங், காதலியுந் தொடங்கும் பொழுது சோமசுந்தரர், அஞ்சேல் தொண்ட! நமக் குலவாக்கோட்டை யளித்தனமென்று சொல்லியருள் யாட்கொண்டார். அவர்களுந் தம்மில்லஞ்சென்று, உலவாக்கோட்டை கண்டு மனமகிழ்ந்து முன் போலவே சிவகைங்கிரிய மியற்றிப் பின் சிவபத மொன்றினர்.

---

39-வது

## மாமனாகவந்து வழக்குரைத்த திருவிளையாடல்.

மேற்சொல்லிய பாண்டிய னரசாட்சிசெய்து வருங்காலத்திற் றனபதி யென்னும் வணிகனும், சுசிலையென்னு மவன்கற்புடைய மனைவியு மில்லறநடத்தி வருகையிற், புத்திரப் பேறின்மையாற் றனபதி தங்கைமகனைச் சுவீகாரப்புத்திரனாகப் பெற்றுவாழுநாளிற் றன் றங்கை தகாதசொற் சொற்றபடியாற் றன்செல்வமெல்லாந் தான் சுவீகாரம் பெற்ற தங்கைமகற்களித்து, தவஞ்செய்யக் காட்டிற்கேகி நோன்று மனைவியோடு கைலையர் கான்மலர் மருவிவாழ்ந்தான். பின்ன ரவன் ஞாயத்தார் தனபதியின் செல்வமனைத்தும், வழக்கலாவழக்கிற் பறித்துக்கொண்டனர்; உடனே தனபதிதங்கை வருந்திச் சோமசுந்தரேசர் சன்னதியின் முறையிட்டுக்கொள்ள, வவள் கனவிடைத் தோன்றி, நாளைநீ யரையன் சபையில் வழக்கிடு யாம்வந்து தீர்ப்பமெனச் சொல்லினர். தையலுமவ்வாறே சென்று முறையிட்டுக் கொள்ள, நியாயசபையிற் சோமசுந்தரர், அப்பிள்ளையின் மாமனாய்வந்து வழக்கினைத் தீர்த்துப் பங்காளிகள் கவர்ந்த பொருள்களெல்லா மீட்டுந் தருவித்துக்கொடுத்து மறைந்தருளினர். எல்லாருங் கடம்பவனலிங்கரே யிவ்வுருவடைந்து வந்தனரென வுணர்ந்து, போற்றிப் பூசனையியற்றிப் பொன்னடிபரவினர்.

40-வது

## வரகுணபாண்டியன் அரசாண்டகாலம்

தேவ வருஷம் 9500 (ஒன்பதினாயிரத்தைநூறு) க்கு

திருவிளையாடல்கள் 4.

# வரகுணனுக்குச் சிவலோகங் காட்டிய திருவிளையாடல்.



வரகுணபாண்டிய னரசாட்சி செய்யுங்காலத் தொருநாள், வேட்டைக்குச்சென்று மீண் டிரவில் வரும்போழ்து தன்குதிரையின் கால்பட் டொருவேதியனிறந்தான்; மறுநாட்காலை வேதியர்களிறந்தவேதியனைக் கொணர்ந்து வாசலிற்கிடத்தி யரசனுக்குத் தெரிவிக்க, தென்னன் மிகப் பொன் கொடுத் தடக்கஞ்செய்வீரென விடுத்தான்; பின் பிரம கத்தி தொடர, அதனை நீக்கவேண்டிய சாந்திகளுந் தானங்களு மியற்றியுந் தொலையாதது கண்டு, சோமசுந்தர ராலயஞ் சென்று துதிக்க. சோமசுந்தரர் அன்ப! பாவ மிப்பொழுது தொலையாது, நீ சோழனோடு போர்செய்து மதுரையைவிட்டுக் கடந்தால், நீங்குமெனச் சொல்லி மறைந்தார். இஃதோ வருட்பெருஞ் சோதியின் றிருவுள மெனவெண்ணியிருக்கும் போழ்து, சோழன் பாண்டியனுக்கு நேர்ந்த பிரமகத்தியையறிந்திதுவே நல்லசமயமென வெண்ணிப் படையெடுத்துவந்த போழ்து, பாண்டியனும் படையொடெதிர்த்து முறியவடித்து, அவனைத் தொடர்ந்து, பொன்னிநா டணைந்து, பொன்னியாடி, மருதூரமர்ந்த கடவுளைத்தொழுதான். உடனேபாதகந்தொலைந்து, மதுரையை யடைந்து சொக்கர் திருவிளையாட்டிதே யெனத் துணிந்திருந்தான். ஒருநாட் சிவலோகங் காணவிரும்பி யிரவு நாலுசாமமுஞ் சொக்கர்க்குப் பூசனையியற்றி வேண்ட; பெருமான் றிருவுளமிரங்கிச் சிவலோகமதனைப் புவியினிற் கொணர்ந்துநந்தியைக்காட்டெனப் பணித்தார். அவருங் காட்டல்கண்டு பெருமித முற்றுப் பிஞ்ஞகன் பதத்தைப்போற்றிப் பேசருஞானமுற்றுப் பெரும் விழாக்கள் பல வாற்றி வந்தான்.



41-வது
# விறகுவிற்ற திருவிளையாடல்.



எவ்வுலகுந்துதிக்கச் சிவலோகங்கண்ட வரகுணபாண்டியன் அரசாட்சி செய்யுங்காலத்தில், வடதிசையிலிருந் தேமநாதனென்னு மொரு யாழ்வல்லோன் வந்து, பாண்டியனவையிலெய்தி, யரசனைக்களிப்பித்து, வரிசைபெற்றிருந்தான்; வரிசைபெற்ற தன்மை யாற் றன்னை வெல்பவரில்லையெனத்தருக்கி நின்றான். இஃதறிந்த பாண்டியன், பத்திரனென்னுந் தன் சங்கயாழ்ப்புலவனை யழைத் தேமநாதனோடு யாழ்பாட வல்லையோவென்றான்; அதற்குப்பத்திரன் நின் னன்பினாலும், சோமசுந்தரன்றிருவருளினாலும், நாளையது செய்வேன்; அவன் விருதுக ளனைத்துங் கைக்கொள்வேனென்றான். வழுதி யவ்வாறே செய்யெனவிடுக்கப் பத்திர னில் லிற்கேகுநெறியிடை யேமநாதன் மாணவர்வாசிக்கும் யாழ்வன்மையைக்கேட் டிவர்களே யிவ்வாறிருந்தாற் றலைவ னெவ்வாறிருப்பனோ? வென வஞ்சி, சோமசுந்தரர் பாற் றெரிவித்துத் துதித்து, நீயே துணையெனப்புகன்று தன்னகம் போய்ச்சேர்ந்தான்.

பாணன் குறைமுடிக்கச் சொக்கேச ரொரு விருத்தனாய், விறகாளாய், ஏமநாதன் வாயிலிற்சென்று, விறகை யிறக்கிவைத்துச் சாதாரிப்பண்பாடினார். யாழ்வலான் பாடல்கேட்டுமயங்கி வெளியேவந்து நீயாரென, யான் பாணபத்திரனிடம் யாழ் பயின்றவன், யான் விருத்தனுப், கண்டச்சுக மற்றதினாலும், யாவரினுங் கடைபட்டதாலும், என்னை நீக்கினன், நான் விறகுவிற்றுச் சீவிக்கிறேனென; ஏமநாத னதிசயித் தின்னொருமுறை நீ பாடியதைப் பாடென, அவருமவ்வாறே பாடினார். எல்லாமசைவற்றன. தேவகானமா யிருத்தலைக்கண் டிவனித்தனை வன்மை யுடையனாயின், மற்றைய னெத்தகையனோ? வெனவஞ்சி யன்றிரவேநள்ளிரவி லொருவரு மறியாதபடி, எல்லாவற்றையும் போட்டோடித் தன்னகர் புக்கொழிந்தான். சுந்தரர், பத்திரன் கனவினிடை யிதனைத் தெரிவித்து மறைந்தார். மறுநாட்காலை பாண்டியன், ஏமநாதனைக் காணாது நடந்தனவெல்லா முணர்ந்து, கூடலிங்கன தருள்விளையாட் டெனப் போற்றிபாணர்க் கரும்பொருள் கொடுத்தரனையேபாடி யருள்கவெனவிடுத்தான்.

42-வது

# திருமுகங்கொடுத்த திருவிளையாடல்



பாணபத்திரன், பாண்டியனுத்தரவின்படி சிவபெருமானைப் பாடிக்கொண்டு வருநாளிற், சிவபெருமான் றினந்தினம் மணியும், பூணும் வெறுக்கையும், நல்கிவந்தார். அதனைக்கொண்டு சிவனடியார்களுக்கும், தங்கிளைகளுக்கு முதவிவந்தான். பின் சிலநாளொன்றும் வழங்காததினால், நிரப்புற்று வருந்தும் போழ்து, கனவிடைத் தோன்றி, யாம்சேரமானுக்கோர் பாசுரந்தருதும், அதனைக் கொண்டு சென்று பொருள்பெற்று வருதியென வுரைத்து.

மதிமலி புரிசை மாடக் கூடற்
பதிமிசை நிலவும் பானிற வரிச்சிற
கன்னம் பயில்பொழி லால வாயின்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்
பருவக் கொண்மூப் படி யெனப் பாவலர்க்
குரிமையி னுரிமையி னுதவி யொளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க
பண்பாலி யாழ்பயில் பாணபத் திரன்
றன்போ லெம்பா லன்பன் றன்பாற்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே.

என்னும் பாசுரத்தையும், அளித்தருளினர். பாணபத்திரன் விழித்தெழுந்து, பாசுரத்தை யெடுத்துக்கொண்டு, சேரமானிடஞ் சென்றனன். சொக்கேசர், சேரன் கனவிலே சித்தராய்த்தோன்றி, நந்திருமுகங்கொண்டு பாணபத்திரனென்னும், யாழ்வலன் வருவனவற்கு, அரும்பொருள் கொடுத்துத் தெற்றெனவனுப்புதியென்றனர். சேரமான் விழித்தெழுந்து, உமாபதியார், கனவிடைத் தோன்றிய வெல்லாம் புகன்று, அவர் திருமுகங்கொண்ட பாணபத்திரன், எங்குளனெனத் தேடிக்கண்டு, கொண்டாடித் துதித்து, பொன்னனி கொடுத்துப்போற்றியனுப்பினான்.

43-வது

## பாணபத்திரனுக்குப் பலகையிட்ட திருவிளையாடல்.



பாணபத்திரன், சிவபெருமானிடை யிடையறு வன்பனாகி யிரவிலுஞ்சென்று, சொக்கனைப் பாடிக்கொண்டு வந்தான்; ஒருநா ளிறைவர் பத்திரன் நோன்பை சோதிக்கவேண்டி, யிரவிற் கடுமழை பொழியும்படிச் செய்ய; அதற்கு மஞ்சானாகி மழையி னனைந்துகொண்டே பத்தியோடு பாடுதல் கண்டுங் கேட்டு முவந்து, சுந்தரர் பலகை யொன்றளித் ததிலிருந்து பாடென வியம்பினர். அவனுமதனையேற் றதிலிருந்து பாடிவந்தான்; அதுமுதற் சங்கத்துப் பலகையிலிருந்தே பாடுவானாயினன். பாண்டியனிஃதறிந் தாலவாயமரு மாதிமூர்த்தி, பாணரிடைவைத்த வன்பின் பெருக்கைக்கொண்டாடி, யவனைப் பூசித்து வந்தான்.

---

44-வது

### இராசாதிராசபாண்டியன் ஆண்டகாலம்.

தேவவருடம் 4700 (நாலாயிரத்தெழுநூறு) க்கு

திருவிளையாடல் 1.

## இசைவாதுவென்ற திருவிளையாடல்.



வரகுண பாண்டியன் கதியடைந்தான். கதியடைந்தபின், அவன்மகன் 'இராதிராசன்' அரசாட்சி செய்யுங்காலத்தவ்வரசன் காதற்கிழத்தியரி லொருத்தி, கீதமிசைக்கும் விஞ்சையில் வல்லவளாய்த் தன்னில் நிகரெவரு மிலரென விருக்கு நாளிற், பாணன் மனைவியோடு வாதுசெய்து வெல்லக் கருதி, பாணன் மனைவியை யழைத்து யாழ்வாசிக்கையிற், பாண்டியன் காத லோர்பாற்பட மொழிய, பாணன் மனைவி யிறைவர்கோயிற் புக்கு முறையிட்டுக்கொள்ள, இறைவர், நாளைநீ பாடுக, அங்கே யாம் வந்து, நடுச்செய்வோமென மொழிந்து மறைந்தார். அவ்வாறே மறுநா ளிசைப்போர்செய்யுங்கால், பாண்டியனீதிகோடி, யொருசார்பாகச்சொல்ல,

ஆலால சுந்தரர்வந்து, நலமீது, தீதிதெனச் சிக்கறுத்துக் கூறிப் பாண்டியன் கிழத்தியே தோற்றாளெனக்கூறி, பாணன் மனைவி யையயலவளே முதுகிற் றாக்குதல் வேண்டுமெனத் தாக்குவித்துப் பின் மறைந்தார். எல்லாருங் கடம்பவனநாதர் கருணையீதெனக் களிப்புடன் றுதித்துச் சுந்தரனை வணங்கினார்கள்.

---

## சுகுணகுணபாண்டியன் ஆண்டகாலம்.

தேவவருடம் 8400 (எண்ணாயிரத்து நானூறு)

இவர்காலத்துத் திருவிளையாடல்களில்லை.

45-வது

## இராசராசபாண்டியன் ஆண்டகாலம்.

தேவவருடம் 10200 (பதினாயிரத்திருநூறு) க்கு

திருவிளையாடல்கள் 2.

# பன்றிக்குட்டிக்குப் பால்கொடுத்த திருவிளையாடல்.

"குருவிருந்ததுறை"யென்னுமூரிற்சுகலனென்னும் வேளாளனுக் கவன்மனைவி சுகலை யென்பவள் வயிற்றிற் பன்னிரு குமாரர் பிறந்து, செல்வமாய் வளர்ந்து வருநாட்களிலொருநாள், பன்னிரு குமாரரும் வேட்டைக்காரர்களோடு சேர்ந்து காட்டிடைச் செல்லுகையில், அங்கிருந்த அருமைத் தவசியைநோக்கி நகைத் திகழ்ச்சி செய்ததினா லவன் வெகுண்டு நீவிர் பன்றிக்குட்டிகளாய்ப் பிறந்து, தாயுந் தந்தையுமற் றுழல்கவெனச் சபித்தார். அப்பொழுதவர் களஞ்சி, அத் தாபதர் காலில் விழுந்து வணங்கி, எம்பிழையைப் பொறுத்தருள்கவென; முனிவரிரங்கி நீவிர் தாய் தந்தையிழந்து வருந்தும்போழ்து, சிவபெருமா னுமக்கன்னையாய்வந் தருளுவாரென மொழிந்தார். பின்னிவர்கள், அவ்வாறே யோர் விச்சாதரன், புலத்திய ரிஷிக்குத் தப் பிழைத்தவாற்றான், முனிவரன் முனியப்பட்டுப் பன்றியா கெனச் சபிக்கப்பட்ட பன்றிக்குக் குட்டிகளாய்ப் பிறந்திருக்கும் போழ்து, பாண்டியன் கணையாற் றாயிறந்தது. பின் னுதவியின்றி யிடர்ப்படுவதை, கிருபாமூர்த்தியாகிய சிவபெருமானறிந்து, பன்றிக்குட்டிகட்குத் தாயெனத் தோன்றி முலைகொடுத் தூட்டி வளர்த்துச் சென்றார்.

46-வது

## பன்றிக்குட்டிகளை மந்திரிகளாக்கின திருவிளையாடல்.



ஆனையையுரித் தானையையெய் தானையைக்காத் தானையைய ளித்தருளிய, அப்பனார் முலைகொடுத்துவளர்த்த தன்மையாலீரு ரு பன்றிக்குட்டிகளு மானுடவுடம் பெடுத்துப் பன்றிமுகத்தோ டும், கலைகண் முற்றுமுணர்ந்த மிக வனப்புடையராகவு மிருந்த னர். சிவபெருமான், பாண்டியன் கனவிடைத் தோன்றி, யெம்ம ன்பினர் பன்னிருவ ரேனமுகத்தோ டெழிற் படுகாளையராய் ஞா னமுணர்ந்த வராயிருக்கின்றனர். அவரை நினக்கு மந்திரிகளாக்கிக் கொள்ளென. மன்னன் விழித்தெழுந்தவர்களைத் தேடிக்கண்டு தன்மந்திரிகளாக்கிச் சிறப்புச்செய்து வந்தான். இப்பன்னிரு மந்தி ரிகளும் பாண்டியற்கு, நன்மை பலவிளைத்து ஞானசூரியராய் விள ங்கி, பின் கயிலையுற்றுச் சிவகணங்களாகத்திகழ்ந்தார்கள்.



47-வது

### சுகுண பாண்டியன் ஆண்டகாலம்.

தேவ வருடம் 5500 (ஐயாயிரத் தைநூறு)க்கு

திருவிளையாடல்கள் 2.

## கரிக்குருவிக் குபதேசித்த திருவிளையாடல்.



இராசராச பாண்டியன், விண்ணடைந்து ,பெண் கலந்தபாக ரொண்மலர்த்தாணண்ணி, யெண்ணருஞ்சுகமுற்றான். பின் னவன் மகன் சுகுணபாண்டியன் முடிசூடி, யரசியனடாத்தி வந்தான். ஒருவன் றன்பாவத்தாற் "கரிக்குருவி" யாகப்பிறந்து, காகமுதலி புட்கள் தனக்கூறு செய்யவாற்றாதாகி யென்செய்வதென வேங்கி யோர் மரக்கிளைமே லிருக்கையிற், பறவைசெய்த முற்றவப்பயனு லொருசிவவேதிய னம்மரநிழலுற்று, கூடலிலே மூர்த்திவிசேட ம், தலவிசேடம், தீர்த்த விசேடமுடையது; கண்டளவின்முத்தி

தருவதெனமொழியக்கேட்டு, மெய்ஞ்ஞானமுற் றக்குருவிபொற் றாமரைக் குளத்திற்படிந்து மூன்றுபகல் நோன்புசெய்தது; உடனே சிவபெருமான் றோன்றி 'சிவாமிருத்தஞ்சியா' என்னு மந்திரமுபதேசஞ் செய்தருளினார். கரிக்குருவி பரனைப்போற்றி, பரவித் தன் குறைகளெல்லாம்புகல; ஈசனக்குருவிக்கும், அதனினத்திற்கும். வன்மையையு மீந் தக்குருவிக்கு முத்தியுந் தந்தருளினார்.

---

## 48-வது

# நாரைக்கு முத்திகொடுத்த திருவிளையாடல்.

மதுரையி லொரு தாமரைத் தடாகத்தில், ஒருநாரை வசித்துக் கொண்டிருந்தது; அத்தடாகத்திற் றண்ணீர் வற்றியுணர்வற்றதால், நாரை, தபோதனர்கள் வசிக்கும், அதோ தீர்த்தமென்னு மழகிய தடாகத்தில் வந்திருந்து, முனிவ ரவ்விடத்து நீராடிக், கூடனாயகன் கொற்றத் திருவிளையாடற் பெருமைகளை யோதிக் கொண் டிருப்பதைக்கேட் டந்நாரைக்கு, ஞானந்தோன்றிப் பொற்றாமரைக்குளத்தை நாடிச்சென்று, நீராடிக்கரைக்க ணிருந்து பதினைந்து நாள் நோன்புநோற்றது; பதினைந்தாநாட் பசியால் வருந்தியது. அங்கோர் மீன்றுள்ளக்கண்டு பிடித்துண்ண விரும்பி, ஆலவா யம்மான் புனிதத்தீர்த்தத்துள்ள, சீவனைச்சிதைக்க நினைத்தேனே யென மனம்வாடிநிற்கையி லீச்சுரன் றோன்றி, யாதுகாரணம் பற்றிநோற்கின்றாயென. ஐயனே! அற்பப்பிராணியாகிய தமியேன், நின்னலர்ப்பதம் பற்றிப் பிறவிக்கடல் கடந்து, வீடெனுங்கரையடைய நோற்கின்றே னென்றது. அதனைக்கேட்ட நஞ்சுண்டகண்டர் நனிமகிழ்ந்து, அஃதளித்தன மின்னும்வேண்டும் வரங்கேளென. பரங்கருணைத் தடங்கடலே! கடல்சுவறவிட்ட கால கால! பொற்றாமரைத் தடத்தின் மீன்முதலியன விருப்பதா லென்போலிய பறவைகளுக்கு, நோன்புசெயற் கிடையூறுகின்றன; வாதலினாலவைகளிலா தாக்கியருளல் வேண்டுமென, வதற்கவர் சம்மதித்து, மீன்முதலியன வின்மையாக்கி மறைந்தருளினார். பின்னர் நாரை, பொன்னுலகரு மடைதற்கரிய கைலாயப் பெரும்பத மடைந்து சிவனையுற்றுச் சிறப்புற வாழ்ந்தது.

இவர்கள்காலத்துத் திருவிளையாடல்களில்லை.

| | |
|---|---|
| சித்திர மேரு பாண்டியன் தேவவருஷம் | 6200 |
| சுகுண சேகர பாண்டியன் | 6100 |
| சித்திர விரத பாண்டியன் | 8300 |
| சித்திர பூஷண பாண்டியன் | 10600 |
| சித்திரத்துவச பாண்டியன் | 4700 |
| சித்திர வர்ம பாண்டியன் | 5800 |
| சித்திர சேன பாண்டியன் | 7400 |
| சித்திர விக்கிரம பாண்டியன் | 10200 |
| இராச மார்த் தாண்டன் | 9600 |
| இராச சூடா மணி | 8700 |
| இராச சார்த் தூலன் | 6800 |
| துவிசாரச குலோத் துங்கன் | 4400 |
| அயோதனப் பிரவீரன் | 3300 |
| இராச குஞ்சரன் | 5700 |
| இராச பயங் கரன் | 4400 |
| உக்கிர சேன பாண்டியன் | 5800 |
| சத்துரு சயன பாண்டியன் | 4500 |
| வீரபரா க்கிரம பாண்டியன் | 3400 |
| வீமத் தோ மன்னன் | 2200 |
| பிரதாப மார்த் தாண்டன் | 5300 |
| விக்கிர மஞ் சுகன் | 7500 |
| சமர கோலா கலன் | 9100 |
| அதுல விக்கிர மன் | 5200 |
| அதுல கீர்த்தி பாண்டியன் | 3400 |
| கீர்த்தி பூஷண பாண்டியன் | 2400 |

ஆகவிதுவரைப் பாண்டியர் பட்டங்கள் ஐம்பத்திமூன்று. இவ்வைம்பத்துமூன்று பாண்டியர்களும், நானூற்றறுபத்தேழாயிரந் தேவவருடம், அரசாண்டார்கள். சிலர் ஆண்டும், ஆளாமலுஞ் சென்ற தேவவருடங்கள் பதினேழாயிரம். ஆகவருடம் நானூற்று நாற்பத்து நாலாயிரத்திற்கு 6-வதுமனுவின் சதுர்யுகம் முப்பத்தேழுஞ் சரி. மேற்படி மனுபிரளயமாகி 7-வதுமனுவாகிய வைவசுதமனு நாளையிற், சோமசுந்தரர் திருவருளாற், சில அறிகுறிகடவிர மற்றையன வழிந்து காடாக விருந்தகாலம் தொண்ணூற்றேழாயிரத்து முன்னூறு தேவவருடம்.

49-வது

## வங்கியசேகர பாண்டியன் ஆண்டகாலம்.

## தேவ வருடம் 29100 (இருபத்தொன்பதினாயிரத்துநூறு)க்கு திருவிளையாடல்கள் 3.

# ஆலவாயான திருவிளையாடல்.



கீர்த்திபூடணன் அரசியற்றுநாளில் பிரளயகாலம் வந்தது. அப்பொழுது சத்தசமுத்திரங் கரைகடந் தார்த்துப் பொங்கி, ஒருங்கெழுந் துலகத்தை யழித்தன. சோமசுந்தரக் கடவுளுடை யவிமானமும், மீனாட்சியம்மை கோயிலும், இடபமலை, யானைமலை, நாகமலை, பசுமலை, பன்றிமலை முதலியவு மழியாதிருந்தன. வெள்ளம் வற்றியபின் சிவபெருமா னுலகத்தை முன்போலப் படைத்துச் சந்திரன், சூரியன், அக்கினியென்னு மூவருடைய குலத்தினின்றுந் தமிழ்வேந்தர் மூவரையும் படைத்தருளினர்.

அப்பொழுது சந்திரவமிசத்துதித்த வங்கிசசேகர பாண்டியனரசாட்சிசெய்து வருங்காலத்தின் முன்போல மக்களும் பிறவும் பெருக, இடம்போதாமைகிச் சோமசுந்தரனை நோக்கி முன்னிருந்த வெல்லைகாணேன், எங்கோவே! இவர்களுக்கிடமெங்கே வகுப்பது? நகரினெல்லை காட்டவேண்டு மெனப் பன்முறை பரவிவேண்ட; நீரணிசடையார், நீறணிமெய்யர், சீரணிநாகர், போரணிவில்லர், காரணிகண்டர், ஏரணி கருணைகூர்ந்து பேரணியன்பனே! யாம் நாளைக் காலை குறிப்பம், அவ்வண்ணங் கோட்டை கட்டுதியென வியம்பித் தன் சிறுவிரன் மோதிரத்தை யெடுத்தெறிந்தனர். பேரரவாக மாநகரைவளைந்து நிற்க; அவ்வெல்லைக்குக் காடுகளை வெட்டிப் பரஞ்சோதியா ரருளாற் கோட்டைவகுத் தகழியாக்கிப்பொன்னகர் தனினும் பல்லாயிரமடங்கு பொலிவெய்தும்படி செய்து கூடகோபுரம், மாடமாளிகை, சோலைசாலை, செய்குன்று, மணியரங்கு முதலியன முன்னினும்பிறங்க வாக்கி, வீதிகள்வகுத்து முறைப்படுத்தி, நால்வருணத்தாரையுங் குடியேற்றிக் கடைச்சங்கமென, முன்னோர்போலப் பெருஞ் சங்கமுமியற்றி மலைமகண் மருவியவாமனர் கோயிலைப் பொலிவுடையதாக்கிப் பொன்னணி நவமணிப் பூண்முதலிய வியற்றி, முறைகோடா தரசாண்டுவந்தான். கோட்டையின் வடக்கே யிடபமலையும், தெற்கேபரங்குன்றும், மேற்கேயேடகமும், கிழக்கே பூவணமுமாய வெல்லைதழுவி நிற்கவமைத்து, இந்திரனும்வெள்க வரசியற்றிவந்தான்.

50-வது

# சுந்தரப்பேரம்பெய்த திருவிளையாடல்.



வங்கிய சேகரபாண்டிய னரசியற்றி வருங்காற், சோழ னயற் புலத்தரசர்தந் துணைக்கொண்டு பாண்டியன்மேற் படையெடுத்து வர; அஃதறிந்த பாண்டியன் பண்ணமைகூடற் பரம்பரன் கோயிற் புக்குப் பரவித் துதித்துக் குறைசொல்லி யிரக்க. அம்மைபாகத் தைமுகக் கடவு ளஞ்சற்க, நீயெதிர்த்துப் போர்செய்க, யாம்வந்து வெற்றி வருவிப்பமெனச் சொல்லி யருளினர். அவ்வணமே பாண்டியன், சோழனை யெதிர்த்துப் போர்புரியச் சோழன், வெற்றி யடைய வெய்துங் காலத்து வீரனயப் பாண்டிய னாய்நின்று போர்செய் தலட்டுகையி லஞ்சிய சோழன், இஃதாரே யித்தகைய பாணந் தொடுப்பவனென, மெய்யிற் றைத்த பகழியைப் பிடுங்கி, நோக்குகையிற் 'சுந்தரன்' என வெழுதி யிருக்கக்கண்டு நடுங்கிச் சோமசுந்தரரேயென வோட்டம்பிடிக்க வாரம்பித்தான்; அதுகண்டு துணைவந்த வரசர்கள், சோழனைத் தடுத்து வீரத்தோடு பொருதுடனீத்து, மெய் வீடடைந் தனர்கள். பின் சோழன் றோற்றுத் தன்னகரோடி யொழிந்தான்; பின் பாண்டியன் வெற்றியடைந்து, வாகைசூடிச் சுந்தரநாதனே சுந்தரவீரனய்த் தோன்றிச் சுந்தரப் பேரம்பெய்து சுந்தரவாகை சூடச் செய்தானெனப் போற்றித் துதித்தினி தரசாண்டிருந்தான்.

---

51-வது

# சங்கப்பலகைகொடுத்த திருவிளையாடல்



வங்கியசேகர பாண்டிய னரசாட்சி செய்துகொண்டு வருங் காலத்தில், முன்னொருநாட் பிரமனுனவன் காசியிற் பத்துப் பரி மகஞ்செய்து கங்கையாடுதற்கு, நாமகள், சாவித்திரி, காயத்திரி யென்னு மடவாரோடு செல்லுகையில், வழியிலோர் விச்சாதரமாது கானம்பண்ணுவது கேட்டுக்கொண்டு நிற்கையில், பிரம னில்லாதுசென்று, கங்கைக்கரையை யடைந்து, வாணியைநோக்கிக்

காணுமையான் மற்றிரு மடவாரோடும் நீராடிக் கரையேறினன். பின்வந்த வாணி தன்னைவிட்டு நீராடினதற்கு, நாயகன்மேற் சினக்க; திசைமுகன் குற்றநின்னதாக வென்மேற் சினக்கின்று யிக்குற்றத்திற்கு நீ நாற்பத்தெட்டு மானிடயாக்கை பெற்றுப் பின்னம்மை யடையென; பின் றன்குற்றமுணர்ந்த வாணி, வேண்டிக்கொள்ள; உன்னுருவாகிய அகரமுதலாகிய 48 அக்கரமும் 48 புலவர்களாகும். அப்போழ்து சோமசுந்தரர் 49-ம் புலவராய்த் தோன்றி வந்து கூடவிருப்பர்; பின் ஞம்வந்து நும் விமோசன மியற்றுவமென்றார். அப்பொழுது இறைவர், முற்சங்கங்களுட் டோன்றியதுபோலத் தாமுமொருபுலவராய்த் தோன்றி, யவர்கள் குறைகளை நீக்கிச் சிக்கறுத்து, தமிழ்நூல் தந்தார். பின்னர் பலதேயத்திருந்தும் புலவர்தோன்றி, பலவிதமாக வாதஞ்செய்வதைங்கண் டவர்கள் புலமையை யளவறுக்கவும், சங்கத்தார் வீற்றிருக்கவும், புலவர்கள் வருத்தம் போக்கவும், அவர்கள் முறைகேட் டொருபலகையீந்தருளினர். பின்பவர் பண்புடை மதுரைநாயகனைப் போற்றி வந்தார்கள்.

52-வது

## வங்கியசூடாமணி சண்பகபாண்டியன் ஆண்டகாலம்.

தேவவருடம் 20 000 (இருபதினாயிரம்)

## இவர்காலத்துத் திருவிளையாடல்கள் 4.

# தருமிக்குப் பொற்கிழி யளித்த

## திருவிளையாடல்.



ஒருநாட் பாண்டியன் றன் னின்புறு தையலோடினிது மேனிலையி லிருக்கையிற் றன் னாயகி கூந்தலினின்று, நறுமணங்கமழ; இதனினும் வாசனைவீசு நறும்பூவுமுளதோவென வையுற்று, மனக்கோளை யாப்பில்வைத் திசைப்போர்க் கிது தருவலென, ஆயிரம் பொன்னுள வொரு கிழியைச் சங்கமண்டபத்திற் றூக்கிவைத்தான். சங்கப்புலவர் முயன்றுஞ் சித்திபெறாராயினர். இஃதுணர்ந்த 'தருமி' 'என்னும் பிரமச்சாரி, ஆலவாய்ப் பெருமானார் திருக்கோயிற் றிருப்பணிகொண் டொழுகுவோ னந்தரத்தமரருங்காணுச்சுந்தரன் பாதம்போற்றிக் குறையிரந்துவேண்ட, அவர்

"கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத்தும்பி
காமஞ்செப்பாது கண்டதுமொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்
செறியெயிற் றரிவைகூந்தலின்
நறியவுமுளவோ நீயறியும்பூவே"

என்னும் பாசுரமருளினர். அதனை யெடுத்துச்சென்று பாண்டியனிடங்காட்ட. அவனுவந்து சரிசங்கப்புலவரிடங் காட்டெனு; அன்னோன் காட்டக்கண் டவர்களு மிது விழுமிதமாயிருத்தல் பற்றி, வியந்தொப்பினர். பின் னவ் வேதியன், பொற்கிழி யறுக்கப் போகையிற் பொறுமையால், நக்கீரன் செய்யுட் பொருட்குற்ற முடைத்தெனப் புகன்றான். உடனேபிராமணன், அழகரிட முறையிட; சொக்கரே புலவருருக்கொடு வந்து கேட்க. மயிரிற்குச் செயற்கையேயொழிய, இயற்கையான் மணமில்லென. தேவமாதர்க்கோ? வென. அதுவுமப்படியே யென்றான். நீ வணங்குங் கற்பகப் பூங்குழலியார்க்கோ? என்றார். அஃது மவ்வண்ணமே யென்றான். உடனே விரிசடைச் சுந்தரர், நெற்றிக்கண்காட்ட. கீரன் நீர் மேனியெல்லாங் கண்காட்டினும், பாட்டுக்குற்றமே யென்றான். அப்பொழுது தீவெதுப்ப வாற்றானாய் மடுவில்விழுந்தான்.

---

53-வது

## நக்கீரனைக் கரையேற்றின திருவிளையாடல்.

கீரன் முக்கட் செக்கர்மேனிய னழல்விழி திறக்க, வெம்மையுற்றுப் பொற்றாமரைத் தடத்து வீழ்ந்திருக்க. புலவர்கள் நக்கீரனில்லாமற் பொலிவுகுன்றி, அம்மையோர்பாகனைத் துதித்து வேண்ட; அம்மையப்பர் தன் வாமபாகக் கொடியொடும் பொற்றாமரைக்கரைவா, நக்கீரன் பிழைபொறுத் தருளும்படித் துதித்துப் போற்ற. அருள்சுரந்து கரம்பற்றி, மடுவி னின்று மெடுத்துக்கரையேற்றினர். உடனே கீரன் காளத்தியந்தாதி முதலிய பனுவலால், அம்மையையும், ஆதிமூர்த்தியையுந் துதித்தான்.

54-வது

# நக்கீரனுக்கு இலக்கணம் உபதேசித்த திருவிளையாடல்.



நக்கீரன் முப்பொழுதும் பொற்றாமரைக் குளத்திலாடி, ஆலாலசுந்தரப்பெருமானை முறைமுறை துதித்துப் பூசித்துவந்தான். அவனன்பிற்குருகி யவனிட மம்மையோடுவந் தருள்செய்து பின்னவற் கிலக்கண முபதேசிக்க விரும்பி, என்செய்வதென் றம்மை யாரைக்கேட்க; மணதினத்துத் தென்னாட்டைச் சமப்படுத்தவடக்கிருந்திங் குறுங்காற் றமிழ்நாடேயென்ற வகத்தியற் குலகத்தோ டொன்றவுதித்துத் தென்பால் வழங்கிவருந் தென்றமிழை யுபதேசித் தருளினீரே, அவ் வகத்தியரைக்கொண் டிப்போது கற்பிக்கலாமெனச; அஃதே நலனெனக்கொண் டவரையழைத்து, கீரனுக் கிலக்கணம் போதிக்கச் செய்தார். அவரு மவ்வாறே போதித்துக் கீரனுக்கு, ஞானமுண்டாக்கினர். அவன் முனிவர்பாற் கற்றுத்தேர்ந்து, தான்செய்தபிழையை நினைத்துவருந்தி முனிவர்பாற் கேட்டபடியே நூல்கள் வகுக்கவாரம்பித்தான்.

---

55-வது

# சங்கத்தார் கலகந்தீர்த்த திருவிளையாடல்.



நாற்பத்தெண்மராய வரும் புலவர்களுந் தந்தஞ் சத்திக்கேற்றவாறு பலவாறு நூல்செய்து, தம்மைத்தாமே வியந்து, தாமே சரி, தாமேசரி யெனத்தருக்கி நின்றார்கள். இச்சிக்கறுக்கப் புலவர்கள்சென்று, ஆதிலிங்கனாகிய அறுமுகன்றாதையை, அகத்தியற்கின் றமிழுணர்த்திய மலைமகள்கூறனை, வணங்கி யெம்மவர் பனுவலின் விழுமிதுந் தாழ்வுஞ் சீர்தூக்கிப் புகன்றருளுமென. சிவபெருமான் சோதிலிங்கத்தினின்றுந் தோன்றி, நீவிர் தனபதியென்னும் வணிகற்கும், அவன்மனைவி குணசாலியென்பவட்கும், அவர் தவப்பேற்றாற் றெய்வத்தன்மையுள்ள குமாக்கடவுளே, ஒருவூமைப்

பிள்ளையாகப் பிறந்துளான்; அவன்பாலெய்தி நம் நூலையோதுமின், அவனுங்கணூலி னன்றிது, இது தீதென நாட்டுமென்றார். அவர்களுமையென் றருளியரெங்ஙனம் விளக்குமெனத் தாழ்ந்து வேண்ட. அவர் நம் நூனயத்திற்குத்தக்க மெய்ப்பாட்டால் விளக்குமென்றார். அவர்களுமவ்வாறே யச்சேயைக்கொணர்ந்து, பீடத்தேற்றி, மலர்கொடு பூசித்துத் தந்தம்நூலைச் சொல்ல, சிலருக்குத் தலையசைத்தனர். சிலர்க்குமுகமலர்ந்தனர். சிலர்க்கு, ஆனந்தக்கண்ணீர் விட்டனர். சிலரைவெறுத்தனர். சிலரை யிகழ்ந்தனர். கீரன், கபிலர், பாணர்முதலியவர்கள் நூல்கேட்டுப் பேரானந்தங்கொண்டு பல்லாயிரந்தரஞ் சிரமசைத்து வெள்ளவெள்ளமாக, ஆனந்தக்கண்ணீர்வடித்தனர். பின்னர் புலவரே தங்கள் தராதரமறிந் தடங்கியிருந்தனர்.

| | தேவ வருடம். |
|---|---|
| பிரதாபசூரியபாண்டியன் | 15000 |
| வங்கிஷத்துவசன் | 13000 |
| ரிபுமர்த்தனபாண்டியன் | 12000 |
| சோழவங்கிஷபாண்டியன் | 10000 |
| சேரவங்கிஷபாண்டியன் | 8500 |
| பாண்டிய வங்கிஷன் | 3900 |
| வங்கியசிரோமணி | 8700 |
| பாண்டீச்சுரன் | 6800 |
| குலத்துவசபாண்டியன் | 7800 |
| வங்கியபூஷணபாண்டியன் | 4300 |
| சோழசூடாமணி | 5200 |
| குலசூடாமணி | 3200 |
| இராசசூடாமணி | 4500 |
| பூபசூடாமணி | 3600 |

56-வது

## குலேசபாண்டியன் ஆண்டகாலம்.

தேவ வருடம் 6200 (ஆறுபிரத்திருநூறு) க்கு

திருவிளையாடல்கள் 2.

## * இடைக்காடன் பிணக்குத்தீர்த்த திருவிளையாடல்.

குலேச பாண்டியன் முத்தமிழ்க் கடலுமுண்ட முழுதுணர்வுடையவனு யரசுசெய்திருக்கும் போழ்து, கபிலரி னேயராகிய இடைக்காடர் வந்து, தாஞ் செய்துள பிரபந்தத்தை வாசிக்கச் செருக்கினுற் சிறிதும் மதியாதிருக்கும் போழ்து, கபிலர் மிகவருத்தமுற்று, சிவபெருமான்கோவிலெய்தி முறையிட்டு நகர்விட்டேகையிற் சிவபெருமான், மரகதவல்லியுடன் வடக்கே வைகைக்குத் தென்பாலிருந்தார். விடிந்து கோயிற் சுந்தரரையும், மீனுட்சியையுங் காணுது, வடக்கே சென்றிருத்தல் கேட் டவ்விடஞ்சென்று பணிந்து வேண்ட. பின்னர் சோமசுந்தரரையும், அம்பிகையையுங் கோயிலிலிருத்திக் கபிலர் இடைக்காடரையும், மன்னிக்கவேண்டிப் பரிசளித்தும் புகழ்ந்துபோற்றி யாதரிதான்.

---

57-வது

## வலைவீசிய திருவிளையாடல்.

சிவபெருமா னம்மையாருக்கு வேதப்பொருளுரைக்க; அதனைச் சிறி தசட்டையாகக் கேட்டதினுற் கோபங்கொண்டு, வலையர்மகளாய்ப் பிறக்கவெனச் சபித்தார். இஃதறிந்த விநாயகர், சாத்திரங்களனைத்தையுங் கடலிலெறிந்தார். அவரைச் 'சுறு' வாகவிருந்து புத்தகங்களைக் காக்கவென்ருர். சுப்பிரமணிய ரிடையேதோ

---

* இடைக்காடன் பிணக்குத்தீர்த்த திருவிளையாடலில், இடைக்காடனுக் கரசன் சன்மானஞ்செய்யயாதிருந்தபோது, சுவாமி கோபித்துக்கொண்டுபோய் வைகைக்குத் தெற்கேயிருந்த இடம், இப்போது மதுரை வெளிவீதியில் பழையசொக்கநாதன்கோயிலென வழங்கிவருகிறது.

ன்றி முறைகெட மொழிந்தமையால், ஊமைச்செட்டி யாகென மொழிந்தார். அம்மை நின்னைப்பிரிந்து முய்வேனோவென வாட்ட முற்றகாலையில்; யாம்வந்து மணப்பமெனத் திருவாய்மலர்ந்தருளினார். அவ்வாறே யம்மையானவள், வலையன்மகளாய்ப் பிறந்திருந்தாள். விநாயகர் சுறாவாய்ப்பிறந்தார். சோமசுந்தரர் செம்படவனாத்தோன்றி, வலையர்கள் வேண்டுகோளின்படி விநாயகராகிய சுறாவைப்பிடித்து வேதங்களையெடுத்துக்கொண்டு, லோகமாதாவாகிய அம்பிகையை மணந்து விண்ணின்மறைந்தருளினார். கண்டவர்கள் கனவோ நனவோவெனக் கொண்டாடிச் சோமசுந்தரனைப் பூசித்துப்போற்றினார்கள்.

---

58-வது

## அரிமர்த்தனபாண்டியன் ஆண்டகாலம்.

தேவவருடம் 4250 (நாலாயிரத்திருநூற்றைம்பது) க்கு

### திருவிளையாடல்கள் 4.

# திருவாதவூரடிகளுக் குபதேசித்த

## திருவிளையாடல்.

வேண்டருஞ் சிறப்புடை யரிமர்த்தனபாண்டிய னரசாட்சி நீதிகோடாதியற்றி வருநாட்களில், அவற்குத் திருவாதவூரி லவதரித்த அமாத்தியர்குலத்துத் தோன்றலாகிய ஞானவள்ளல் 'வாதவூரார்' என்னு மியற்பெயருடைய பெரியர் மந்திரியாயிருந்தார். பாண்டியன் பரிகளனைத்து நோயுற்று மாண்டொழிந்ததினாலே, வேறுகுதிரைகள்வாங்க, அரசசேகரன் மந்திரியாராகிய வாதவூராரிடம் பொன் பலகோடிகொடுத்துத் துரகங்கொண் டணைதியென விடுத்தான். இவர் விடைபெற்றுச்சென்று, வழியிற் றிருப்பெருந்துறையிற் சிவபெருமா னாசிரியவடிவங் கொண்டுவர. அவரானுபதேசம்பெற் றவ ருத்தரவின்படிப் பொன்னெலா மடியார்களுக்களித்து, பேசாபெருமையனை மெய்யுணருற்றினை மனங்கசிந்துபாடிக்கொண்டிருந்தார். அரசன்மாக்கள் வராமைகண்டு, செய்திகளெல்லாங்கேட்டுத் திருமுகம்விடுக்க. மதிமுடி யண்ணலார்சொற்டி யாறுநாட்சென்றபின்னர், கலிமாக் காணலாகுமெனப் பதில்விடுத்துத்

தானுஞ்சென்று, பாண்டியற்கண்டு, ஓரிருதினத்திங் குயர்பரிகளெய்துமெனப் புகன்று, சுந்தரர் தாள்கள்போற்றித் தொல்வினையறுத்தமேலோன் சிந்தனையற்று நின்றான். பரிதனைக் குறித்தநாளிற்காணாது பாண்டியன் மிகச்சினந்து, திருவாதவூரரை யென்னெனக்கேட்டு.வம்மினென் றுழையரை விட்டான். அவரும்வந்துகேட்கப்பொறுத்திருஞ் சின்னாளென்னு முன்னும் மொழியே மொழிந்தார்.

---

59-வது

# நரியைப் பரியாக்கின திருவிளையாடல்.



அவ்வாறு சின்னாள் பொறும்பொறு மென்றே யென்றுங்கூறுதலைப் பாண்டியன்கேட்டுச் சினந்து, தன்சேவகரைத்தூண்டியக்கள்வனைக் கல்லெறிந்து துன்புறுத்துமின், சிறைசெய்மினென்ன. அவர்களுமோடிக் கல்லா லெறிந்தார்கள். மனமுருக்கு மணிவாசகப்பெரியோனு மடியர் துன்பகற்று மாலாலசுந்தரன் பாதத்தையே பற்றிநின்றான். அன்பர்க் கெத்துயருந் தோன்றுதிருக்கத்தன்மே லேற்றுக் காத்தருளினர். இம்மட்டோ கொடியர்கள் தூயரைச் சிறையிடைச் செறித்தனர். அங்கே புகுத்தப்பட்ட திருச்சிற்றம்பலமுடையார்க் கடியார்

கலிநிலைத்துறை.

சீரார் சிவனே செல்வா சிறியேன் றுயர்தீராய்
மேரார் சிலையாய் மின்னே ரிடையா ளமைகூறாய்
பாரா ரடியார் பற்றே பயனே பரிவுள்ளாய்
காரார் களனே காண்பாய் கருணை புரிவாயே.

எனப் பலவா றெம்பெருமானைத் துதித்தார். எங்குமுள்ளானும், எல்லாமுணர்வானும், எல்லாம் வல்லானுமாய வெம் பிரான்றொண்டனின் றுயர்கண்டு தங் கணநாதர்களைக்கூவி விடயத்தைத்தெரிவித்து, நரிகளைப் பரியாக்கி, அவர்களை யாளாக்கித் தானுந்தலைவனாய்ப் பாண்டியன்முன் றோன்றி, குதிரைகளைச் சேர்ப்பித்தனர். பாண்டியனனந்தங்கொண்டு, வாகீசரை விடுவித்துச் சிறப்பு

